தமிழ்த்தேசிய



# செங்கொடி



அரசியலை ஆணையில் வையுங்கள் – மாவோ

இருமாதயிதழ்

இதழ்-1 அக்டோபர் - நவம்பர் 2018 தனிச்சுற்று மட்டும் விலை ரூ.20/-


உலக தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்! தேசிய இனங்களின் விடுதலை வெல்க!!

## செப்டம்பர் 01

தமிழ்த்தேசிய விடுதலை போரில் உயிர் நீத்த தோழர்கள்



தோற்றம் : 01.09.1950



மறைவு : 09.06.2017





தோழர் தர்மலிங்கம்





தோழர் அன்பழகன்



தோழர் பழனிவேல்



தோழர் செகநாதன்

### தோழர் தமிழரசன்

# செவ்வணக்கம்

இந்திய ஒன்றியத்தில் நக்சல்பாரி
இயக்கத்தின் தொடர்ச்சி...
தேசிய இனங்களின் விடுதலை
என்பதன் வாயிலாக நிறைவு பெறும்.


இவண்,
தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம்
தொடர்புக்கு : 95247 09860.

# மக்களே போராடுவோம்



கடலூர் மாவட்டம், பரங்கிப்பேட்டை அருகே உள்ள ஐ.எல்.&எப்.எஸ். பவர் கிரேடு நிறுவனம் கொத்தட்டை ஊராட்சியின் சிலம்பி மங்கலம், அரியகொஸ்தி, வில்லியநல்லூர் கிராமங்களை உள்ளடக்கி 1181 ஏக்கரில் நிறுவனம் செயல்படுகிறது. நிறுவனத்தின் திட்ட மதிப்பு 3720 கோடி, உற்பத்தி மின்சாரத்தின் அளவு 1700 மெகாவாட் , என்பது நிறுவனத்தின் கணக்கு. அதுவல்லாது. அரசிற்கும் மக்களுக்கும் தெரியாமல் கள்ளத்தனமாக 1980 மெகாவாட் மின்சாரம் தயாரிப்பதாக கழுக்க தகவல் ஒன்றும் உள்ளது.

இத்திட்டத்திற்காக தேவைப்படும் நிலக்கரி இந்தோனிஷியா, ஆஸ்திரேலியா, தென்ஆப்பிரிக்கா, ஆகிய நாடுகளிலிருந்து கடல் வழியாக கொண்டு வருவதற்கு பரங்கிபேட்டை கடற்கரையில் துறைமுகம் அமைக்கப்படும் திட்டம் ஒன்றும் உள்ளது. இத்துறைமுகம் செயற்பாட்டிற்கு வரும்வரை தற்காலிகமாக புதுச்சேரி துறைமுகத்தையும், காரைக்கால் துறைமுகத்தையும் பயன்படுத்துகிறார்கள்.

நிலக்கரி துறைமுகத்திலிருந்து எடுத்து வரும்போதும், அனல் மின் நிலைய புகைப்போக்கியில் இருந்து வெளியேற்றப்படும் நச்சு புகையினாலும் ஏற்படும் கரிப்படலமும் அருகில் உள்ள 40-க்கும் மேற்பட்ட கிராமங்களில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது. இதை கண்டித்து புதுகுப்பம் கிராம மக்கள் தொடர் போராட்டத்தில் ஈடுபட்டு வந்தனர். அமைதியாக நடந்த போராட்டத்தைக் கூட தாங்கிக் கொள்ளாத ஆலை நிர்வாகம் காவல்துறையை ஏவி 22 பேர் மீது வழக்கு பதிவு செய்தது, வழக்கு பதிவு செய்ததை கண்டித்து CPI(M) மாநில செயலாளர் தோழர் பாலகிருஷ்ணன் கண்டனம் தெரிவித்ததால் வழக்கில் மக்களை கைது செய்ததை கைவிட்ட காவல்துறை, சிதம்பரம் கோட்டாட்சியர் முன்னிலையில் அமைதிப்பேச்சு வார்த்தைக்கு அழைத்து போராட்டத்தை தந்திரமாக நீர்த்து போக செய்துவிட்டார்கள். ஆனால் புதுகுப்ப கிராம மக்கள் கிராம சபை மூலம் மவட்ட ஆட்சியரிடம் மனு கொடுப்பது என்றும், மீன் வளத்துறை அமைச்சரிடம் மனு கொடுப்பதெனவும் முடிவு செய்துள்ளனர். இது குறித்து ஆய்வு செய்வதற்காக தமிழக ஒடுக்கப்பட்டடோர் விடுதலை இயக்கம் சார்பாக செந்தீ நாகவரசன், தோழர் தமிழரசன், தாஸ், தமிழர் உரிமை இயக்க தோழர். ஐயா, சுரேஷ், தமிழ் தேசிய பாதுகாப்பு இயக்கம் சார்பாக தோழர் கலை. தோழர் சிவக்குமார், தோழர் பாஸ்கர் ஆகியோர்கள் சம்பந்தப்பட்ட புதுகுப்பம் கிராமத்திற்கே சென்று விசாரித்ததில் கிராம மக்கள் போதிய ஒத்துழைப்பு கொடுக்காததால் மேற்கொண்டு எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

மேலும் இந்த பகுதியில் SRM குழுமம் புதிதாக அனல் மின் நிலையம் அமைக்க முடிவு செய்துள்ளதாக தகவல் கிடைத்துள்ளது. இது உண்மையானால் கடலூர் மாவட்டமே மக்கள் வசிக்க லாயக்கற்ற பிரதேசமாகதான் போகும்.

மக்களிடையே போராட்ட குணம் இல்லாமல் வெறுமனே மனு கொடுத்தால் எந்த காலத்திலும் பிரச்சனைக்கு விடிவு கிடைக்காது. போராட்டத்தை நீர்த்து போக்வே செய்யும், மக்கள் போராடாமல் எவ்வித தீர்வும் அவர்களுக்கு கிடைக்க போவதில்லை.

ஆகவே மக்களே அமைப்பாய் திரண்டு போராடுவோம்! வெல்வோம்!!

-தோழர் கலை

உலக தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்! தேசிய இனங்களின் விடுதலை வெல்க!

தமிழ்நாட்டில் இதுவரையில் கண்டிராத அளவிற்கு தமிழ்த்தேசிய எழுச்சி வளர்ச்சியடைந்துள்ளது. என்பதை காண்கிறோம்.

ஆனால் அந்த எழுச்சி எப்படி? தமிழ்த்தேசிய விடுதலையை நோக்கி செல்லும் என்பதும், யார்? எந்த அமைப்பு? வழி நடத்தும் என்பதும், கேள்விகுரியதாக உள்ளது. தமிழ்த்தேசிய அரவியலில் கொஞ்சம் பின்நோக்கி பார்த்தோமானால் சில விடயங்கள் நம் கண்முன்பாக வரும்.

இந்திய ஒன்றியத்தில் நக்சல்பாரி இயக்கத்தின் தொடர்ச்சியாக பாடடாளி வர்க்க தலைமையில் வரலாற்று வழி தமிழ்த்தேசிய விடுதலையை முதன்முதலில் முன்வைத்து போராடியவர்கள் தோழர் தமிழரசன் உள்ளிட்ட தோழர்கள், அவர்களின் மறைவிற்கு பிறகு தமிழ்தேசிய அரசியலில் சில நகர்வுகள் இருந்தது.

தமிழகத்தில் தோழர் தமிழரசன் அவர்களுக்கு பிறகு தமிழ்த்தேசிய அரசியல் முன் எடுப்பில் பாட்டாளி வர்க்க தலைமையில் வரலாற்று வழி தமிழ்த்தேசிய விடுதலை எனவும், பாட்டாளி வர்க்க தலைமைக்கு மாற்றான அரசியலும், பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்திறகு மாற்றான அரசியலும், ஆயுத போராட்டமே தேவையில்லை என்ற அரசியலும் நிலவியது.

மேற்கண்ட அரசியல் நிகழ்வுகளுக்கு இடையே சிந்தாந்த போராட்டம் நடந்து கொண்டே இருந்தாலும், அரசால் தடைசெய்யப்பட்ட தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி (மா.லெ.) தமிழ்நாடு விடுதலைப்படை, மற்றும் தடை செய்யப்படாத தமிழ்நாடு முற்போக்கு சிந்தனையாளர் எழுச்சி மன்றம், சோசலிச இளைஞர் எழுச்சி மன்றம், தமிழ்த்தேசிய செங்கொடி சங்கம், ஆகிய அமைப்புகளின் கீழ் தமிழ்த்தேசிய அரசியல் சிறப்பாக செயல்பட்டது. இருந்தும் சில அரசியல் சூழலால் தொய்வடைந்தது.

தற்சமயம் தமிழகத்தில் பாட்டாளி வர்க்க தலைமையில் வரலாற்று வழி தமிழ்த்தேசிய விடுதலைக்கு மாற்றாக ஆபத்தான தேர்தல் பாதை தமிழ்த்தேசிய மரபுவழி தமிழ்த்தேசியம், மொழிவழி தமிழ்த்தேசியம், போன்ற கருத்தாக்கங்கள் கொண்டு சிலர் தமிழ்த்தேசியம் தொடர்பான தவறான புரிதல்களை மக்களிடையே கொண்டு சேர்க்கிறார்கள். இது தொடர்ந்தால் நிச்சயம் தமிழ்த்தேசியம் நிரந்தரமாக புதைக்கப்படும்.

உண்மை என்னவெனில் தமிழ்த்தேசிய விடுதலை என்பது மார்ச்சிய வழியில் பாட்டாளி வர்க்க தலைமையிலான வர்க்க போராட்டத்தின் வாயிலாகவே அடைய முடியும், இதற்கு மாற்றாக வேறு எந்த வழியிலும் தமிழ்த்தேசிய விடுதலை என்பது சாத்தியமற்றது.

தற்போதைய தமிழக அரசியலில் எந்த அமைப்பும் தமிழ்நாட்டின் மக்களிடையே ஏற்பட்டுள்ள தமிழ்த்தேசிய எழுச்சியை பயன்படுத்தி தெளிவான அரசியல் பாதையில் செல்லாமல் இருப்பதால்.

வேறு வழியின்றி நக்சல்பாரி இயங்கங்களின் தொடர்ச்சியாக பாட்டாளி வர்க்க தலைமையில் வரலாற்று வழி தமிழ்த்தேசிய விடுதலையை அடைய தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம் தனது அரசியல் பாதையை தொடங்குகிறது.

இவண்

**தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம்**

தொடர்புக்கு: 9524709860.

# நாம் கம்யூனிஸ்ட்கள்:

1. உலக மக்கள் அனைவருக்கும் நலன்பயக்கும் சமூக அமைப்பு கம்யூனிச சமுதாயமாகும். முதலாளிய சமுதாயத்தில் தனியுடைமை சமுதாயத்தில் இருக்கின்ற மக்களுக்குகிடையிலான ஏற்றத்தாழ்வுகளோ, வேற்றுமைகளோ, சமூக கேடுகளோ, பொதுவுடைமை சமூக அமைப்பில் இருக்காது. அத்தகைய பொதுவுடைமை சமுதாய அமைப்பில் வாழ உலக மக்கள் ஒவ்வொரு தேசமாக ஆயத்தமாகி வருகின்றாா்கள். அந்த வகையில் தமிழக மக்களும் கம்யூனிச சமுதாயத்திற்கு மாற முதற்படியாக நடத்தவேண்டியது தமிழ் தேசிய விடுதலையாகும்.

2. நாம் கூறும் தமிழ்தேசிய விடுதலை என்பது முதலாளிய சிந்தனை வழிபட்ட தனி உரிமை நீடிக்கக். கூடிய பூகோள பிரிவினையல்ல. பாட்டாளி வர்க்க சிந்தனை வழிபட்ட சோஷலிச தமிழகமாகும். ஏகாதிபத்திய சுரண்டலும் நில பிரபுத்துவ சுரண்டலும் ஆதிக்கமும் நீடிக்காத தமிழ்தேசமாகும்.

3. நாம் கூறும் தமிழ்தேசிய விடுதலை என்பது தமிழர்களுக்கான அரசில் அதிகாரத்தை பெறுவது என்பதாகும். தமிழர்களுக்கென்று அரசியல் அதிகாரம் இல்லாமல் தமிழ்தேசிய இனத்திற்கான உரிமைகள் முழுமைபெறாது.

4. திராவிட இனவாதமானது ஏகாதிபத்திய எதிர்ப்போ, நிலப்பிரபுத்துவ எதிர்போ இல்லாமல் ஆரிய இன பார்ப்பனிய எதிர்ப்பை மட்டுமே காட்டுகிறது. அது தமிழ் இனம் அரசியல் அதிகாரம் பெற வழியல்ல.

5. தமிழ் இன வாதமோ: தெலுங்கு, கன்னடம், மலையாளி எதிர்ப்பை கூறுகிறதே தவிர நிலப்பிரபுத்துவத்தை எதிர்க்க வேண்டியது பற்றியோ, ஏகாதிபத்திய எதிர்ப்பு பற்றியோ பேசுவது கிடையாது. அதனால் தமிழர்களுக்கான அரசியல் அதிகாரத்தை வெல்வதற்கான போராட்டத்தை எடுப்பதில்லை.

6. இனவாதங்கள் மொழி போராட்டம் கலாச்சார உரிமைகளுக்கான போராட்டம், நதிநீர் போராட்டம், எல்லைப் பிரச்சனைகளுக்கான போராட்டம் என சில்லரை கோரிக்கைகளுக்கான போராட்டங்களுடன் திருப்திபட்டு கொள்கின்றனரே தவிர அடிப்படை அரசியல் அதிகாரத்திற்கான போராட்டத்தை நடத்துவது இல்லை.

7. மேலும் இனவாதிகள் தமிழ் மக்களிடம் இனவாதத்தை தூண்டிவிட்டு இன விடுதலைக்கு போராடாமல் சட்டமன்றமன்றத்திலும், பாராளுமன்றத்திலும், மத்தியிலும், மாநிலத்திலும் பதவிகளை பெற்றுக்கொண்டு சுகம் காண்கின்றனர்.

8. ஆக இனவாதிகளை எதிர்க்காமல் இனவிடுதலையைப் பெறமுடியாது.

9. இன வாதமானது தமிழ் இன விடுதலைக்கு எதிராக இருக்கக்கூடிய தமிழ் நில பிரபுக்களையும் தரகு முதலாளிகளையும் எதிரிகளாக பார்க்காமல் அவர்களையும் தமிழர்களாகவே பார்க்கின்றனர். அதனால் இன விடுதலை போராட்டம் வளர்வதில்லை.

10. தமிழர்கள் வளர்ச்சியடையாமலும், முன்னேறாமலும் இருப்பதற்கு காரணம் இங்கு சுயமான சுதந்திரமான தேசிய தொழில் வளர்ச்சியில்லை.

**11. தமிழ்தேசிய தொழில் வளர்ச்சி ஏற்படாதிருக்க காரணம்**

(1) தொழிற்துறையில் அன்னிய ஏகாதிபத்திய பன்னாட்டு நிறுவகங்களின் தொழில் வளர்ச்சியே இருப்பது.

(2) விவசாயத்துறையில் நிலப்பிரபுத்துவ உற்பத்தி முறை நீடிப்பது.

12. அந்நிய ஏகாதிபத்தியங்களின் பண்ணாட்டு நிறுவனங்கள் யாவும் தமிழ்தேச உடைமையாக்கப்பட வேண்டும். நிலப்பிரபுக்களின் நிலங்கள் யாவும் உழுபவனுக்கே நிலம் சொந்தமாக்க வேண்டும்.

13. அதனை செய்ய தடையாய் இருப்பது இந்திய ஆளும் அதிகார வர்க்கமாகிய இந்திய தரகு முதலாளி வர்க்கமாகும். அவ்வகையில் இந்திய அரசை எதிர்த்து போராட வேண்டும்.

14. இந்திய அரசுக்கு எதிரான போராட்டம் என்பது தமிழக நிலபிரபுக்களுக்கு எதிரான போராட்டமும் தமிழ்நாட்டிலுள்ள பன்னாட்டு நிறுவனங்களுக்கு எதிரான போராட்டமும், இந்திய தரகு முதலாளிகளின் நிறுவனங்களுக்கு எதிரான போராட்டமுமாகும். ஏதோ தமிழக மக்களுக்கும் இந்திய அரசுக்கும் இடையிலான போராட்டம் என்பது மட்டும் அல்ல.

15. தமிழ் தேசிய விடுதலைக்கு தமிழக மக்கள் அணிதிரட்டப்பட வேண்டும்.

## மக்கள் என்போர் யார்?

வர்க்க ஆய்வு:

தமிழ்நாட்டிலுள்ள முதலாளிகள், நிரபிரபுக்கள், தொழிலாளர்கள், விவசாயிகள், குட்டி முதலாளிகள்.

தமிழ்நாட்டிலுள்ள முதலாளி வர்க்கத்தினர் குணாம்ச ரீதியில் மூன்று நிலையில் உள்ளனர்.

(1) இந்திய ஆளும் தரகு முதலாளி வர்க்கத்துடன் சேர்ந்துள்ள தமிழ் தரகு முதலாளிகள்.

(2) இந்திய தரகு முதலாளி வர்க்கத்துடன் சமரசம் செய்து கொண்டுவிட்ட தென்னிந்திய தரகு முதலாளி வர்க்கத்திடம் சேர்ந்துள்ள தமிழ் தரகு முதலாளிகள்.

(3) தமிழ் தேசிய முதலாளிகள்:

அதில் தமிழ்த்தேசிய முதலாளிகள் மட்டுமே தமிழ்த்தேசிய விடுதலைக்கு நிற்க கூடியவர்கள். இதர இரு பிரிவுகளும் தமிழக விடுதலைக்கு எதிராக நிற்க கூடியவர்கள்.

**விவசாயிகள் குணாம்சரீதியில் மூன்று நிலைகளில் உள்ளனர்.**

(1) பணக்கார விவசாயிகள்,

(2) நடுத்தர விவசாயிகள்

(3) கூலி ஏழை விவசாயிகள்.

இந்த மூன்றில் கூலி ஏழை விவசாயிகளுக்கும் நடுத்தர விவசாயிகளுக்கும் மட்டுமே தமிழ்த்தேசிய விடுதலைக்காக நிற்பவர்கள்.

**தமிழ்நாட்டில் தமிழ்த்தேசிய விவசாயிகளுக்கு நிற்கக்கூடிய புரட்சிகர வர்க்கங்கள்.**

தொழிலாளர்கள், தேசிய முதலாளிகள், குட்டி முதலாளிகள், கூலி ஏழை விவசாயிகள், நடுத்தர விவசாயிகள்

**எதிர் புரட்சி வர்க்கங்கள் :-**

இந்திய தரகு முதலாளி வர்க்கத்துடன் சேர்ந்துள்ள தமிழ் தரகு முதலாளிகள், தென்னிந்திய தரகு முதலாளி வர்க்கத்துடன் சேர்ந்துள்ள தமிழ் தரகு முதலாளிகள், நிலபிரபுக்கள்,

**தலைமை:-**

தமிழ்த்தேசிய விடுதலைக்கு தமிழக முதலாளிவர்க்கம்தான் தலைமையேற்க வேண்டும். ஆனால் அவ்வர்க்கம் குணாம்சரீதியில் மூன்று நிலைகளில் உள்ளதால், அம்மூன்றில் தேசிய முதலாளி வர்க்கத்தை தவிர ஏனைய இருபிரிவுகளும் எதிர்புரட்சி வர்க்கங்களாய் உள்ளதால் தமிழ்த்தேசிய புரட்சிக்கு தலைமை ஏற்கும் நிலையில் இல்லை. தமிழ்த்தேசிய முதலாளி

வர்க்கம் தமிழ்த்தேசிய விடுலைக்காக போராடுமே தவிர தலைமை கொடுக்க இயலாத நிலையில் உள்ளது. தமிழ்த்தேசிய முதலாளிவர்க்கம் தலைமையேற்காத நிலையில் தமிழ்த்தேசிய முதலாளி வர்க்கம் வரலாற்று வழியில் செய்ய வேண்டியதை பாட்டாளி வர்க்கமே தமையையேற்று நிறைவு செய்ய வேண்டியுள்ளது.

அதாவது கம்யூனிஸ்ட் கட்சியே தமிழ்த்தேசிய விடுதலைக்கு தலைமையேற்க வேண்டும். தமிழக பாட்டாளிவர்க்கம் தமிழ் நாட்டளவில் செயல்படும் ஒரு கம்யூனிஸ்ட் கட்சி, தமிழ்த்தேசீய விடுதலைக்கு தலைமையேற்க வேண்டும்,

**விவசாயிகள் பிரதான சக்தி:**

தமிழக மக்களில் பெரும்பாண்மையோர் விவசாயிகளாவர். முக்கிய நிலப் பிரபுத்துவ உற்பத்தி முறையை தகர்க்கும் பிரதான சக்தி விவசாயிகள், அவ்வகையில் தமிழ்த்தேசிய விடுதலையில் பிரதான பங்காற்றும் சக்தி விவசாயிகள். தமிழ்த்தேசீய விடுதலையில் முக்கிய பங்கு உழவர் புரட்சிக்கு உள்ளது. உழவர் புரட்சியின் முக்கிய முழக்கம் உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்பது அது முழுமையாக நிறைவு செய்யப்பட வேண்டும் என்றாலும் இன்றைய உழவனின் உடனடி முழக்கமாக இருப்பது உழவனின் நிலத்தை பரிக்காதே என்பதாக உள்ளது.

தமிழக தொழிலாளர்களும் விவசாயிகளும் பொருளாதார வாத புதை சேற்றில் அமுக்கப்பட்டுள்ளனர். அவர்களை அதிலிருந்து மீட்டெடுத்து அரசியல் படுத்த வேண்டியது மிக முக்கியமாகும் .

**தமிழ் தேசிய விடுதலைக்கு:**

◆ பாராளுமன்ற பாதையின் மூலம் தமிழ்த்தேசிய விடுதலை சாத்தியமில்லை.

◆ தமிழக மக்களை புரட்சிப்பாதையில் அணி திரட்டுவதன் மூலமே தமிழ்த்தேசிய விடுதலை சாத்தியம்.

◆ தமிழ் தேசிய விடுதலை போராட்டம் சீன பாதையிலா, ரஷ்ய பாதையிலா என்பது கேள்வியல்ல. சுயமான பாதையை தேர்வு செய்ய வேண்டும்.

◆ தமிழ் தேசிய விடுதலைக்கு தலைமை ஏற்கும் கட்சிக்கு, பாட்டாளிவர்க்க கட்சிக்கு வழிகாட்டும் தத்துவமாக மார்ச்சியம் இருக்க வேண்டும்.

◆ தமிழ் தேசிய விடுதலை போராட்டத்தை குழப்பிவிடும் மண்ணுக்கேற்ற மார்ச்சியம் என்னும் மார்ச்சியத்திற்கு எதிரான கருத்துக்களை ஒதுக்கிவிட வேண்டும்.

◆ பார்பனர்களை தமிழ்த்தேசிய விடுதலை போராட்டத்தில் அமைப்பில் சேர்க்க கூடாது எனும் திராவிட இனவாத கருத்தை ஒதுக்கி தள்ளிவிட வேண்டும்.

◆ தெலுங்கு மொழியை குழு மொழியாக பேசுவோரை இயக்கத்தில் சேர்க்கக்கூடாது எனும் தமிழ் இனவாத கருத்தை ஒதுக்கி தள்ளி விட வேண்டும்.

◆ முஸ்லீம்களை இயக்கங்களில் சேர்க்கக்கூடாது எனும் தமிழ் இனவாத, மதவாத கருத்தை ஒதுக்கிவிட வேண்டும்.

சிங்கள இனவெறி இலங்கை அரசு ஈழ தமிழர்களுக்கு எதிரான இன அழிப்பு போரை நடத்திக் கொண்டிருந்த நேரத்தில் போரை நிறுத்தக்கோரி தமிழக மக்கள் கொதித்தெழுந்தனர். அந்த நேரத்தில் தமிழக விவசாயிகளோ "கள்" இரக்கும் போராட்டத்தை நடத்தினர். தொழிலாளர்களோ கூலி உயர்வு போராட்டங்களை நடத்திக் கொண்டிருந்தனர். விவசாயிகளும், தொழிலாளர்களும் அமைப்பு ரீதியாக இன அழிப்பு போருக்கு எதிராக போராடதது பெரும்குறை.

◆ தமிழை வாழ்வியல் மொழியாக கொண்டும், தமிழ், தமிழ்த்தேசிய விடுதலைக்காக போராசுக்கூடியவர்களை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**தத்துவத்தில் கலப்படம் கூடாது:**

இங்கு சிலர் மார்ச்சியத்துடன் காந்தியத்தையும் மற்றும் சிலர் மார்ச்சியத்துடன் பெரியாரியத்தையும் இன்னும் சிலர் அம்பேத்கரியத்தையும் வேறு சிலர் மார்ச்சியம்-பெரியாரியம்-அம்பேகரியம் என்றும் கூறுகின்றனர். இந்த தத்துவ கலப்படம் எல்லாம் வேண்டாம்.

நாம் கம்யூனிஸ்ட்கள் நமக்கான வழிகாட்டும் தத்துவம் மார்ச்சியம் ஒன்று மட்டுமே.

◆ தமிழ்த்தேசிய விடுதலைக்கு போராடும் நேரத்தில் பழமை வாதமானது, தமிழ் இன பழமை வாதமானது. அதற்கு தடையாக இருக்கும் முக்கியமான பழமை வாதமானது, நிலப்பிரபுத்துவ வர்க்கத்தின் வெளிபாடு ஆகும். அதற்கு எதிராக போராட வேண்டும்.

◆ தனிநபர் பயங்கரவாதம் கூடாது. அது புரட்சிக்கு எதிரானது ஆகும். மக்கள் புரட்சியை தமிழ்த்தேசிய விடுதலை பாதையை தடம்மாற செய்துவிடும்.

◆ அதேபோல காந்திய உண்ணாவிரத போராட்டம் போராட்டங்களே அல்ல. உண்ணாவிரத போராட்டங்கள் இந்து மதம் சார்ந்தது. முஸ்லீம் கிருஸ்துவ மக்கள் அவர்களின் மத எதிர்ப்பு கருத்தாய் பார்ப்பார்கள். தனிநபர் சத்தியாகிரகம் பாட்டாளிவர்க்க கூட்டு போராட்டத்திற்கு எதிரானது ஆகும்.

◆ தமிழன் வாழ்ந்தால்தான் தமிழ் வாழும் தமிழ் வாழும் போது தமிழன் வாழுவான், முதன்மை இடம் தமிழனுக்கே!

◆ தமிழன் அழிந்து கொண்டிருக்கையில் தமிழ்மொழியை மட்டும் வாழவைத்து விடலாம் என்பது வெறும் கற்பனை. தமிழனும் அழிகிறான் தமிழும் அழிகிறது.

◆ மொழி, கடவுள்களாலோ, தனி நபர்களாலோ படைக்கப்பட்டது அல்ல மக்களால் வளர்க்கப்படுவது ஆகும்.

◆ தமிழ் சிவனாலோ அல்லது முருகனாளோ படைக்கப்பட்டதும் அல்ல. அதேபோல் அகத்திய முனிவராலும் படைக்கப்பட்டதல்ல. தமிழர்களால்-மக்களால் வளர்ந்த மொழியேயாகும்.

◆ ஆரிய பார்ப்பனர்கள் சமஸ்கிருதத்தை தேவபாஷையென்றும் தமிழை நீஷ பாஷையென்றும் நிந்திப்பதை எதிர்த்திட வேண்டும். அதே நேரத்தில் அவர்களை போலவே தமிழுக்கும் தேய்வீகதன்மை வழங்கி தமிழின் வளர்ச்சியை முடக்கிவிடக்கூடாது.

◆ சேர, சோழ, பாண்டியர்கள் பற்றி பழம்பெருமை பேசியே காலம் கடத்தக்கூடாது. தமிழர்களின், மக்களின் போராட்டங்களை மறுதலிக்கக்கூடாது. தமிழகத்தில் நடந்த வர்க்க போராட்டங்களை காண தவறக்கூடாது.

◆ சமூக விரோத சக்திகளை ஆதரிக்கக்கூடாது. சமூக விரோத சக்திகளும் காவல்துறை அடக்குமுறைக்கு ஆளாகிறார்கள் என்பதற்காக ஆதரிக்கக்கூடாது.

◆ முதலாளி தொழிலாளர்களின் உழைப்பை திருடுகிறார்கள். முதலாளி திருடர்களாய் இருப்பதனால்தான் உழைப்பாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். தனிப்பட்ட திருடர்களும் மக்களின் உடைமைகளை திருடி மக்களை கஷ்டப்படுத்துகிறார்கள்.

◆ சமூக விரோத சக்திகள் திருடுவது, ரவுடித்தனம் புரிவது, கட்டபஞ்சாயத்து பண்ணுவது, கூலிபடையாய் இருந்து கூலிக்கு கொலை பண்ணுவது, கஞ்சா கடத்துவது, கள்ளசாராயம் சாய்ச்சுவது... போன்ற செயல்களில் ஈடுபடுவோர் சமூக விரோதிகளாவர்.

◆ மக்கள் விரோத செயல்களில் ஈடுபடும் சமூக விரோதிகள் அரசு எதிர்ப்பில் உள்ள புரட்சிகர சக்திகளுக்கு உதவி செய்வதுபோல்

இயக்கத்துக்குள் ஊடுறவி இயக்கத்தின் புரட்சிகர தன்மையை மாற்றி விடுவர். எனவே சமூக விரோத சக்திகளை ஆதரிக்கவும் கூடாது. இயக்கங்களுக்குள் ஊடுறவி விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

◆ சாதி ஒழிய வேண்டும் என்பதில் எவருக்கும் மாற்றுக்கருத்து இருக்க முடியாது.

◆ சாதி இருக்ககூடாது என்று பிரச்சாரம் செய்வதன் மூலம் மக்களின் மனங்களில் மாற்றங்களை கொண்டு வந்துவிடலாம் என்று சாதி ஒழிப்பாளர்கள் பலரும் கருதுகிறார்கள். பிரச்சாரம் தேவைதான் பிரச்சாரத்தின் மூலமே சாதியை ஒழித்துவிட முடியாது.

◆ வரலாற்று போக்கில சாதி தானே ஒழிந்துவிடும் என்று சிலர் கருதுகின்றனர். அவ்வாறு தானாகவே சாதிதானே ஒழிந்துவிடாது.

◆ சாதி என்பது சமுதாயத்தில் ஒரு நிறுவனமாய் உள்ளது. அது எவ்வகையில் நிறுவனமாய் உள்ளது. என்பதை தெரிந்துகொண்டு அதை திட்டமிட்டு ஒழித்தால்தான் ஒழியும்.

◆ சாதி நிறுவனமானது வர்க்க சமுதாய அமைப்பிற்குள் தன்னை தகவமைத்துக்கொண்டு வருகிறது. வர்க்க போராட்டத்தின் இணையாகவே சாதி ஒழிப்பையும் மேற்கொள்ள வேண்டும். சாதிகளுக்கு இடையிலான ஏற்றத்தாழ்வை ஒழிப்பது முதற்கட்ட (ஜனநாயக கட்டம்) சாதியை முற்றிலும் ஒழிப்பது இரண்டாவது கட்டம் (சோஷலிச கட்டம்).

◆ ஏகாதிபத்தியங்களின் தொழில்துறை வளர்ச்சியின் தேவைக்கேற்ப சாதி கட்டமைப்பில் சிறு சீர்திருத்தங்கள் கொண்டு வந்துள்ளது. தமிழ் தேசிய புரட்சி பெரியதொரு மாற்றத்தை சாதி ஒழிப்பில் கொண்டுவரும்.

-ஆசிரியர் குழு

# வீரவணக்கமா ? செவ்வணக்கமா?

சமீப காலங்களில் சில தோழர்கள் செவ்வணக்கத்திற்கும், வீர வணக்கத்திற்கும் வேறுபாடு தெரியாமல் தன்னுயிர் ஈந்த புரட்சிகர தோழர்களுக்கும் வீரவணக்கம் செலுத்தி கொண்டிருக்கின்றனர். அவ்வாறு "வீரவணக்கம்" என்று கூறுவது சரியா?

◆ காந்திய வாதிகள் தியாகிகளுக்கு "அஞ்சலி" செலுத்துவர் .

◆ முதலாளிய வாதிகள் தியாகிகளுக்கு "வீரவணக்கம்" செலுத்துவர்.

◆ பாட்டாளிவர்க்க இயக்கத்தவர்களே புரட்சி தியாகியான தோழர்களுக்கு "செவ்வணக்கம்" செலுத்துவர்.

காந்திய வாதிகள் தியாகிகளுக்கு "அஞ்சலி" செலுத்துவர் அதாவது இந்து மதவாதத்தின் அடிப்படையில் இறந்தவர்களுக்கு "அஞ்சலி" செலுத்தும் வழக்கமுறையில் "அஞ்சலி" செலுத்துவர்.

உலகில் பொதுவாக முதலாளித்துவவாதிகள் தியாகிகளுக்கு மத அடிப்படையில் அஞ்சலி செலுத்துவதையே வழக்கமாக கொண்டுள்ளனர். முதலாளித்துவவாதிகள் அவரவர் நாட்டில் எந்த மதம் அரச மதமாக இருக்கிறதோ அல்லது எந்த மதம் பெரும்பான்மையினர் மதமாக இருக்கிறதோ அந்த மதம் இறந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்த எந்த மத சடங்கு முறையினை மேற்கொள்கிறதோ அந்த முறையிலேயே தியாகிகளுக்கும் அஞ்சலி செலுத்துகின்றனர். முக்கியமாக அவர்களின்

(தொடர்ச்சி 14-ஆம் பக்கம்...)

# தமிழர்களின் மீதான வடவர்களின் பண்பாட்டு படையெடுப்பே விநாயகர் ஊர்வலம்

**அக்கால தமிழர்களால் எதிரிகளின் சின்னமாக கருதப்பட்டு அவமதிக்கப்பட்ட கணபதி சிலையை இக்கால தமிழர்கள், தலையிலே தூக்கிவைத்துக் கொண்டு ஊர்வலம் போவது, தமிழர்களுக்கு அவமானகரமான செயல் அல்லவா!**

பிள்ளையார் என்றும், வினாயகர் என்றும் கணபதி என்றும் அழைக்கப்படும் பிள்ளையார்ப் பற்றிய செய்தி கி.பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன் தமிழ்நாட்டின் வரலாற்றில் கிடையாது. சங்க இலக்கியங்கள் எதிலும் பிள்ளையாரைப்பற்றிய குறிப்புகள் எதுவும் கிடையாது. தமிழ்நாட்டில் பல்லவர் ஆட்சி நடந்து கொண்டிருந்த காலத்தில் வடக்கேயிருந்து சாளுக்கியர்கள் தமிழ்நாட்டின் மீது பலமுறை படையெடுத்து வந்தனர். அவர்களால் நாட்டை பிடிக்க முடியவில்லை. பல்லவர்கள் சாளுக்கியர்களை விரட்டி அடித்து விட்டனர். ஆனால் நாடு பிடிக்க முடியவில்லையே எனும் ஆத்திரத்தில் சாளுக்கியர்கள் தமிழ்நாட்டின் கிராமங்களை கொள்ளையடித்துக் கொண்டு கிராமங்களை தீக்கிரையாக்கிவிட்டு சென்றனர். அதனால் தமிழக மக்கள் சாளுக்கியரை எண்ணி அஞ்சி நடுங்கினர். அதிலும் இரண்டாம் புலிகேசியின் ஆட்சி காலத்தில்தான் சாளுக்கியரின் அட்டகாசம் கட்டுக்கடங்காமல் போனது. தமிழர்களை கொன்று குவிக்கவும் மக்களை கொள்ளையடிக்கவும், ஊர்களை கொளுத்தி தீக்கிரையாக்கவும், இப்படிப்பட்ட அட்டகாசங்களைச் செய்ய சாளுக்கியர்களால் முடிகிறது என்று சொன்னால் அதற்கு காரணம், சாளுக்கியர்களின் தலைநகரமான வாதாபியில் இருக்கும் வாதாபி கணபதி எனும் துஷ்ட தெய்வமே என தமிழக மக்கள் நம்பினர். வாதாபி கணபதி எனும் துஷ்ட தெய்வம் அங்கிருக்கும் வரை நாம் நிம்மதியாக வாழமுடியாது என்று கலவரத்துடனே இருந்தனர் தமிழக மக்கள்.

பல்லவர்கள், படையெடுத்து வந்த சாளுக்கியர்களை வெற்றிபெற விடாமல் விரட்டி விரட்டியடித்து வந்த பல்லவர்கள், படையெடுத்து வந்த சாளுக்கியர்களை வெற்றிபெற விடாமல் விரட்டி விரட்டியடித்து வந்தாலும், அதிலும் முக்கியமாக மகேந்திரவர்ம பல்லவனும், நரசிம்ம வர்ம பல்லவனும் திறமையாக போரிட்டு வந்ததாலும், தமிழ் நாட்டு மக்களிடம் நிலவிய அச்ச உணர்வை நீக்க முடியவில்லை. மக்களின் அச்ச உணர்வை போக்காததால் அவர்களால் நிம்மதியாக ஆட்சியை நடத்த முடியவில்லை. அதற்கு எவ்வாறு தீர்வு காண்பது என்று ஆலோசனை நடத்தினர்.

பல்லவ தளபதி பரஞ்சோதி (புராணங்களில் சிறு தொண்டை நாயனார் என அறியப்பட்டவர்) சாளுக்கிய நாட்டின் மீது போர் தொடுத்து அதை அழித்துவிட்டு வருவதுதான் நிரந்தர தீர்வு என்றார். அவரின் கருத்துப்படியே அவரின் தலைமையில் பெரும் படை திரட்டி

சாளுக்கிய நாட்டின் மீது போர் தொடுத்தனர். பல்லவ தளபதி பரஞ்சோதி சாளுக்கியரின் தலைநகர் வாதாபியை அழித்து அந்நகரிலிருந்து வாதாபி கணபதி சிலையை பெயர்த்தெடுத்து தமிழ் நாட்டிற்கு கொண்டு வந்து தமிழக மக்களிடம் காட்டி, இனி மக்கள் வாதாபி கணபதி எனும் துஷ்ட தெய்வத்தை எண்ணி பயப்பட தேவையில்லை என்றார். அதுமட்டுமல்லாது வாதாபி கணபதி சிலை போன்ற சிலைகளை செய்து அவற்றை ஊர் முச்சந்திகளில் நிறுத்தியும், பெண்கள் நீராடும் நீர்துறைகளில் நிறுத்தியும் அவமதிப்பு செய்தனர். அப்போது அவ்வாறு செய்ததால்தான் தற்காலத்திலும் பிள்ளையார் கோயில்கள் முச்சந்தியிலும் ஆற்றங்கரைகளிலும், குளக்கரைகளிலும் உள்ளன. பல ஊர்களில் மக்கள் துணிதுவைக்கும் கல்லாக பயன்படுத்தி வருகின்றனர். பிள்ளையார் சிலையை கோயில்களிலிருந்து திருடிக் கொண்டுவந்து வைப்பதை பழக்கமாக கொண்டிருப்பதற்கான காரணமும் வாதாபியிலிருந்து பெயர்த்தெடுத்து வந்ததை பின்பற்றிதான். அவ்வாறு பல்லவர் காலத்தில் எதிரியின் சின்னமாக கருதி அவமதிப்பு செய்யப்பட்டது. பிள்ளையார் என்கிற வரலாற்று உண்மையை புரிந்து கொள்ளாமல் தற்கால தமிழர்கள் பிள்ளையார் ஊர்வலம் நடத்துவது சரியா?

பல்லவர்களுக்கு பிறகு தமிழ்நாட்டை ஆண்ட பிற்கால சோழர்கள் சாளுக்கியர்களுடன் உறவை ஏற்படுத்திக் கொண்டனர். இராசராசசோழனும், இராசேந்திரசோழனும் கீழைசாளுக்கியருடன் உறவை ஏற்படுத்திக் கொண்டனர். இராசராச சோழனின் சகோதரி ஒரு சாளுக்கியனை மணந்துகொண்டார். இராசராச சோழனின் மகளும் ஒரு சாளுக்கியனை மணந்து கொண்டாள். இராசேந்திர சோழனுக்கு பிறகு, இராசராசசோழனின் மகள் வயிற்று பேரன் சாளுக்கிய வம்சத்தவன் ஆட்சிக்கு வந்தான். தமிழ்நாட்டில் முதன்முறையாக அந்நிய வம்சத்தவன் ஆட்சி ஏற்பட்டது. அவன் சோழர்கள் பெயரால் ஆட்சி செய்தாலும் அவன் சாளுக்கிய வம்சத்தவன் என்பதால், பல்லவர் காலத்தில் அவமதிக்கப்பட்ட கணபதி சிலைகளை நிமிர்த்தி வைத்து கோயில் கட்டி வழிபடும் தெய்வமாக மாற்றிவிட்டனர். சாளுக்கிய வம்சத்தவர்களை சோழவம்சத்தவர்களாக-தமிழர்களாக எண்ணி ஏமாந்து ஏற்றுக்கொண்டது போலவே பழைய வரலாறு தெரியாமல் பிள்ளையாரை வழிபடும் தெய்வமாக ஏற்றுக் கொண்டு விட்டனர். பிற்கால சோழர்களுக்கு பிறகு தொடர்ந்து பல்வேறு அந்நியர்களின் ஆட்சிகளுக்கு உள்ளானது தமிழகம். முகமதியர் படையெடுத்து, நாயகர் ஆட்சி, மராட்டியர் ஆட்சி, போர்ச்சுகீசியம், டச்சுகாரர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஆங்கிலேயர் என பலரும் தமிழகத்தை கூறுபோட்டு ஆண்டனர். சுமார் ஆயிரம் ஆண்டு காலமாக இன்றுவரை தமிழத்தை அந்நியர்களே ஆண்டு வருகின்றனர்.

அவ்வாறு அந்நியர்கள் தமிழகத்தை கூறுபோட்டு ஆண்ட காலத்தில் தஞ்சையை மராட்டியர்கள் ஆண்டு வந்தனர். தஞ்சையை ஆண்டு வந்த மராட்டியர் அந்நிய சாளுக்கிய வம்சத்தின் தொப்புள் கொடி உறவுகளே. அவர்களுக்கு வாதாபி கணபதி வழிபாட்டை பின்பற்றிய வம்சத்தவர்களே என்பதால் அவர்களும் பிள்ளையார் வழிபாட்டை தமிழக மக்களிடம் திணித்து விட்டனர்.

இந்திய துணைக்கண்டத்தில் ஆங்கிலேயர் கைபற்றிய நாடுகளையெல்லாம்

தங்களின் நிர்வாக வசதிக்காக ஒரே நிர்வாகத்தின் கீழ் கொண்டு வந்து விட்டனர்.

ஆங்கிலேயர் ஆட்சி நிர்வாகத்தில் இந்தியர்களும் பங்கு வேண்டுமென்று அதற்காக தொடங்கப்பட்ட காங்கிரஸ் கட்சியின் தலைவராக திலகர் வந்தபோது, ஆங்கிலேயர்களுக்கு எதிர்ப்பான உணர்வை மராட்டியர்களிடம் தூண்டிவிடுவதற்காக, மராட்டியத்தில் பிள்ளையார் ஊர்வலத்தையும், சிவாஜிக்கு விழாவும் நடத்தினார் திலகர். அதுமுதல் பிள்ளையார் ஊர்வலம் மத தன்மையிலிருந்து அரசியல் தன்மையை பெற்றுவிட்டது. பிள்ளையார் ஊர்வலமானது ஆங்கிலேயருக்கு எதிர்ப்பான உணர்வை மட்டுமல்ல, கிறிஸ்துவர்களுக்கும், முஸ்லீம்களுக்கும் எதிரான உணர்வுகளையும் தூண்டிவிட்டது.

திலகர் அன்று துவக்கிய பிள்ளையார் ஊர்வலத்தின் விளைவு இன்று இந்து முன்னனி ஆர்.எஸ்.எஸ்., பாதிய ஜனதா போன்ற இந்து மதவாத இயக்கங்களும் கட்சிகளை வளர்ப்பதற்கும் அவைகள் முஸ்லீம்களுக்கு எதிராக வன்முறை கலவரங்களை ஏற்படுத்துவதற்காக பிள்ளையார் ஊர்வலத்தை நடத்துவதற்கும் காரணமாய் அமைந்துவிட்டது. அதே போல திலகர் காட்டிய வழி, மராட்டிய வெறி பிடித்த இயக்கமான சிவசேனா வளரவும் காரணமாய் அமைந்துவிட்டது. மராட்டிய இனவெறி, மதவெறி இயக்கமான சிவசேனா பம்பாயில் வாழும் தமிழர்களுக்கு எதிரான இனவெறி தாக்குதல்களை தொடர்ந்து நடத்திவருகின்றனர், என்பது யாவரும் அறிந்ததே. தமிழர்களை சிவசேனா இயக்கத்தவர்-மராட்டியர் தாக்குவதற்கு, அவர்களுக்கு ஆன்மீக பலம் பிள்ளையார் ஊர்வலம்தான் என்பதை தமிழர்கள் உணரவேண்டும்.

ஆங்கிலேயர்கள் இந்திய துணைக்கண்டத்தை விட்டு வெளியேறிய நிலையில் மதவாத அடிப்படையில் முஸ்லீம்கள் பெரும்பான்மையாக வாழும் முஸ்லீம் நாடாக பாகிஸ்தான் நாடும், இந்துக்கள் பெரும்பான்மையாக வாழும் இந்துக்களின் நாடாக இந்தியாவும் தோன்றின. இந்தியா மதசார்பற்ற நாடு என்று கூறிக்கொண்டாலும்-மதவாத எதிர்பு நாடல்ல என்பதால் இந்துக்களையே பெரும்பான்மையினராக கொண்டுள்ளது என்பதால் எதார்த்தத்தில் இந்து மத வாதத்தை ஆதரிப்பதும் சிறுபான்மை மதத்தவருக்கு எதிராகவே செயல்பட்டு வருகிறது இந்திய அரசு என்பது கண்கூடு இந்தியா, பாகிஸ்தான் என இரு மதங்களுக்கான இருவேறு நாடுகள் தோன்றிய பிறகு, இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் இந்து மதவாதிகளால் வினாயகர் ஊர்வலம் நடத்தப்படுகிறது. அந்த ஊர்வலத்தின் போது இந்து முஸ்லீம் மதக்கலவரங்கள் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. ஆட்சியாளர்களும் அதற்கு மறைமுகமாக துணைப்போய் கொண்டிருக்கின்றனர். அதற்கு முடிவுகட்ட இந்திய ஆட்சியாளர்கள் எவ்வித முற்சியும் எடுக்கவில்லை.

கணபதி என்றால் கணம்+பதி= கணபதி கணம் என்பது குலம் ஆகும். அதாவது பழங்குடி இனத்தில் பல குலங்கள் உண்டு ஒவ்வொரு குலத்துக்கும் ஒரு தலைவன் உண்டு. குல தலைவன் என்பதே கணபதி என்பதாகும் பொதுவாக நாகரீக சமுதாய அமைப்பிற்கு முன் வரலாற்றில் பழங்குடி இனங்களே இருந்தன. ஒவ்வொரு குலமும் தங்கள் குலத்திற்கு என்று ஒவ்வொரு குல சின்னங்களை வைத்துக்கொண்டனர்.

பெரும்பாலும் குல சின்னங்களாக ஆடு, மாடு, ... போன்ற விலங்குகளாகவோ பருந்து, புறா, கிளி... போன்ற பறவைகளாகவோ, மீன், முதலை... போன்ற நீர்வாழ் உயிரினங்களாகவோ இருந்தன. அந்த வகையில்தான் வட நாட்டிலிருந்த ஒரு இனத்தவர் குலத்தவர் கணபதியை தங்களின் குல சின்னமாக அமைத்துக் கொண்டனர். அதுவே பிற்காலத்தில் வழிபடும் தெய்வமாக மாற்றப்பட்டுவிட்டது.

பழங்காலத்தில் தமிழர்கள் முருகனை தெய்வமாக வழிபட்டனர். அந்த முருகனுக்கு அண்ணனோ, தம்பியோ கிடையாது. வடவர்களின் ஆதிக்கம் தமிழகத்தில் ஏற்படஏற்பட வடவர்களின் கடவுளர்களும் தமிழகத்தில் புகுத்தப்பட்டனர். வடவர்களின் தெய்வங்களில் ஒன்று சுப்பிரமணியன். வடவர்களின் தெய்வமான சுப்பிரமணியனையும், தமிழர்களின் தெய்வமான முருகனையும் ஒன்றாக்கி விட்டனர். முருகனையும், சுப்பிரமணியனையும் ஒன்றாக்கியவர்கள், அவர்களின் மனைவியர்க்ளை மட்டும் இரண்டு பேராக வைத்துவிட்டனர். முருகனின் மனைவி வள்ளி, சுப்பிமணியனின் மனைவி தேவயானை இருவரையும் ஒருவனுக்கே இரு மனைவியர் என்றாக்கிவிட்டனர். வடவர்கள் சுப்பிமணியனின் அண்ணன் கடவுளாக வினாயகரை கொண்டாடினர். முருகனை சுப்பிமணியனாக சித்தரித்தவர்கள் முருகனின் அண்ணனாக வினாயகரையும் சித்தரித்துவிட்டனர். இத்தகைய கதைகள் யாவும் கோர்க்கப்பட்ட, திரிக்கப்பட்ட, திணிக்கப்பட்ட கதைகளேயாகும்.

பெரியார் ஒரு நாத்திகவாதி. கடவுள் மறுப்பு கொள்கையுடையவர். அவர் தமது கடவுள் மறுப்பு கொள்கைளை தமிழக மக்களிடம் எடுத்து செல்வதற்காக-சொல்வதற்காக பிள்ளையார் சிலைகளை உடைக்கும் இயக்கத்தை நடத்தினார் என்பது யாவரும் அறிந்ததே.

இந்து மதத்தில் பல்வேறு சாமிகள் இருந்தும் வேறு எந்த சாமிசிலைகலையும் உடைப்பதற்கு தேர்ந்தெடுக்காமல். பிள்ளையார் சிலையை மட்டும் உடைப்பதற்கான சாமி சிலையாக பெரியார் தேர்ந்தெடுத்தது ஏன்? வேறு சாமிகளின் சிலைகளை உடைத்தால் தமிழக மக்கள் அதிக அளவு எதிப்பைகாட்டுவர், பிள்ளையார் சிலைகளை உடைப்பதற்கு தமிழக மக்கள் அதிக அளவு எதிர்ப்பினை காட்டமாட்டார்கள். என்பதினால்தான் பிள்ளையார் சாமி சிலையை உடைக்கும் போது மட்டும் தமிழக மக்கள் எதிர்ப்புணர்வை காட்டாததற்கு காரணம் பல்லவர் காலத்தில் பிள்ளையார் சிலைகளை உடைத்தன் தொடர்ச்சியாக அதை தங்களின் ஒரு அளவாக தமிழர்கள் கருதியதே ஆகும்.

வடவர்கள் வடநாட்டில் வருடா வருடம் இராமலீலா விழாகொண்டாடுகின்றனர். இராமலீலா விழாவில் வட நாட்டில் உள்ள அரசியல் வாதிகளும் பங்கேற்கின்றனர். இராமலீலா விழாவானது தமிழர் நாட்டில் கொண்டாடப்படுவதில்லை இராமலீலா விழாவானது வடவர்களும் தமிழர்களுக்குமான போராட்டத்தை சித்தரிப்பது ஆகும். ஆனாலும் அதை

தமிழர்கள் உணரவில்லை. இராமனின் பெயரால் இராமர் பாலம் என்று சொல்லிக்கொண்டு சேதுசமுத்திரதிட்டம் நிறைவேறவிடாமல் தடுக்கின்றனர் வடவர்கள், அதையும் தமிழர்கள் புரிந்துகொள்ள வில்லை. மதத்தின் பெயரால் வடவர்கள் தமிழர்கள் மீது பண்பாட்டு படையெடுப்பை தொடர்ந்து நடத்திக்கொண்டிருக்கின்றனர். அவற்றில் ஒன்றுதான் வினாயகர் ஊர்வலமும் அதனை சரியாக உணர்வதில்லை தமிழர்கள். வரலாற்றில் உழைக்கும் வர்க்கத்தை அடக்கி ஒடுக்கி தொடந்து சுரண்டி வருகிறது சுரண்டும் வர்க்கம் சுரண்டும் வரக்கத்தின் செயலை கருத்தியல் ரீதியாக நியாயப்படுத்தி வருவதே மதங்கள் செய்யும் வேலை அந்த வகையில் மதங்கள் சுரண்டல் வர்க்கத்திற்கானதே. அத்தகைய மதங்கள் வர்க்க ஒடுக்குமுறையை மட்டுமல்லாது இன ஒடுக்குமுறையையும் ஒடுக்கப்படும் இனத்திற்கு எதிராக ஒடுக்கும் இனத்தின் செயலை நியாப்படுத்துவதற்கான கருத்தியல் அமைப்பே மதங்கள்-ஆனால் அது புரியாமல் சாதாரண மக்கள் மதங்களின் பெயரில் அதிக நம்பிக்கை வைத்துள்ளனர். மதங்களின் பெயரில் மக்கள் வைத்துள்ள நம்பிக்கையை கட்டாயப்படுத்தி போக்க முடியாது. அதனால் மக்களின் வழிபாட்டு உரிமையை மறுக்கலாகாது அதே நேரத்தில் மதங்கள் அரசியல் ஆதிக்கம் செலுத்துவதை அனுமதிக்கலாகாது. அவ்வகையில் வினாயகர் வழிபாட்டை தடுக்க கூடாது. என்றாலும் வினாயகர் ஊர்வலத்தை தடை செய்ய வேண்டியது அவசியமாகும்.

◆ உழைக்கும் மக்களுக்கு எதிரான கருத்துருவாக்கமே அரசியலாக்கப்பட்டுள்ள வினாயகர் ஊர்வலம் என்பதை புரிந்து கொண்டு உழைக்கும் மக்கள் வினாயகர் ஊர்வலத்தை புறக்கணிக்க வேண்டும்.

◆ பல்லவர் காலத்தில் எதிரியின் சின்னமாக கருதப்பட்டு தமிழர்களால் அவமதிக்கப்பட்ட சிலையே பிள்ளையார் சிலை. தமிழர்கள் மீது வடவர்கள் நடத்தும் பண்பாட்டு படையெடுப்பின் ஓர் அம்சமே விநாயகர் ஊர்வலம் என்பதை தமிழர்கள் புரிந்து கொண்டு அதை எதிர்த்திடவேண்டும்.

◆ முஸ்லீம்களுக்கு எதிராக மதகலவரத்தை தூண்டி வரும் அரசியலாக்கப்பட்டுள்ள வினாயகர் ஊர்வலத்தை தடைசெய்ய வேண்டும்!

-தோழர் சுந்தரம்

---

செப்டம்பர் -1

தோழர் தமிழரசன், தர்மலிங்கம், பழனிவேல், செகநாதன், அன்பழகன், உள்ளிட்ட தோழர்களுக்கு செவ்வணக்கம் செலுத்தப்பட்ட சுவரொட்டி ஒட்டியதற்காக தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கதின் மீது போடப்பட்ட வழக்குள்.

1. அரியலூர் கா.நி. கு.எண். 342/2018
2. ஜெயங்கொண்டம் கா.நி.கு. எண். 292/2018
3. தா.பழூர் கா.நி. கு. எண்.304/2018
4. செந்துரை கா.நி.கு.எண் 279/2018
5. திட்டக்குடி கா.நி.கு.எண்.112/2018

---



அரியலூர் மாவட்டம் கோபாலன் குடிகாடு கிராமத்தை சேர்ந்த தமிழ்த் தேசிய பாதுகாப்பு இயக்க தோழர் பெ.சங்கர் அவர்களின் தந்தை ஐயா பெரியசாமி அவர்கள் 27-8-2018 அன்று மரணமடைந்தார். ஐயா அவர்களின் இறுதி ஊர்வலத்தில் தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்க தோழர்கள் சுவை.முருகேசன், சிவக்குமார், தியாகராஜன், கலை, பாஸ்கரன், தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்க தோழர் செந்தீ நாகவரசன் பெண்ணாடம் முருகன் போன்ற தோழர்களும் ஊர் பொதுமக்களும் பங்கெடுக்க இறுதி ஊர்வலம் செவ்வணக்கத்துடன் நிறைவுற்றது.

உலக தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்! தேசிய இனங்களின் விடுதலை வெல்க!!

# ஆயுதப்போராட்டம் முதன்மையா? அரசியல் போராட்டம் முதன்மையா?

## இது மார்க்சிய வாதம் அல்ல, மயிர் பிளக்கும் வாதமே!

ஆயுத போராட்டப் பாதையை திசை திருப்பும் விதத்தில் இங்கு சிலர் ஆயுத போராட்டம் முந்தியா? அரசியல் போராட்டம் முந்தியா? எனும் வாதத்தை முன் வைக்கிறார்கள் அது சரியான வாதம் அல்ல.

மாவோவின் ஒரு மேற்கோளை எடுத்துக்கொண்டு அந்த மேற்கோளை பிய்த்து, மாவோ கூறிய அடிப்படைக்கு எதிராக - மாவோவுக்கு எதிராகவே - வாதத்தை வைக்கின்றனர்.

அதாவது "போர் என்பது இரத்தம் சிந்தும் அரசியல், அரசியல் என்பது இரத்தம் சிந்தா போர்" மாவோ இக்கருத்தை ஏன் முன்வைத்தார் என்றால், சீனத்தில் திரிபுவாதிகள் ஆயுதப்போராட்டத்துக்கு எதிராக சீனத்தில் புரட்சியானது போராகவே நடந்து கொண்டிருந்தபோது. புரட்சிப் போருக்கு எதிரான கருத்தை போரை நடத்துவது அரசியல் அல்ல எனும் கருத்தை வைத்தனர். அந்த திரிபுவாதிகளுக்கு பதில் கொடுக்கனும் விதமாகவே போருக்கும் அரசியலுக்கும் உள்ள உறவை விளக்கும் விதமாகவே மேற்கண்ட விளக்கத்தை முன் வைத்தார்.

இருவேறு நாடுகளுக்கிடையே நடைபெறும் போருக்கும், அரசியலுக்கும், சம்பந்தமில்லாத தனித்தனி விஷயமாகவே முதலாளித்துவ சிந்தனையாளயர்கள் பார்க்கின்றனர். போரும் அரசியலும் தனித்தனி விஷயங்கள் அல்ல.

ஒரு நாட்டின் சுரண்டும் வர்க்கம் - ஆளும் வர்க்கம் - தன் நாட்டு உழைக்கும் மக்களைச் சுரண்டுவதற்காகவே அரசை - அரசியலைக் கொண்டுள்ளது.

அந்த ஆளும் வர்க்கம் தன் நாட்டு மக்களை சுரண்டியது மட்டும் போதாமல் மற்ற நாட்டு மக்களையும் சுரண்டுவதற்காகவே போரில் ஈடுபடுகிறது.

அவ்வளவில் வர்க்கப் போராட்டத்தின் நீட்டிப்பே போராக நடைபெறுகிறது.

போர் என்பதும் அரசியலாகிறது.

இருவேறு நாடுகளுக்கிடையே நடைபெறும் போர். அரசியல் ஆகிறது.

உள்நாட்டில் நடைபெறும் அரசியல் போராகிறது.

அவ்வகையில் இருவேறு நாடுகளுக்கு இடையிலான அரசியல் மட்டுதான் போராக நடைபெறும் என்பது அல்ல, உள் நாட்டில் நடைபெறும் அரசியலும் "போர்" ஆக நடைபெறும்.

எனவே புரட்சியைப் போராக நடத்த வேண்டி உள்ளதன் அவசியத்தை வலியுறுத்தும் முகமாகவே - போருக்கும் அரசியலுக்குமான உறவை விளக்கும் முகமாகவே - மாவோ "போர் என்பது இரத்தம் சிந்தும் அரசியல், அரசியல் என்பது இரத்தம் சிந்தா போர்" என்றார்.

அது இப்படி இருக்க அதைச் சரியாக விளங்கிக் கொள்ளாது.

மாவோவின் மேற்கோளை பிய்த்து அரசியல் தனி, போர் தனி என பிய்த்து, அரசியலை இரத்தம் சிந்தா போர், என்றுதானே மாவோ கூறியுள்ளார். அரசியலில் இரத்தம் சிந்துதலே இருக்கக்கூடாது என்று இரத்தம் சிந்தாமலே அரசியலை நடத்த வேண்டும். அதுவே முதன்மையானது என்று ஆயுதப்போராட்டத்துக்கு எதிரான திரிபுவாதத்தை சிலர் முன் வைக்கின்றனர்.

-தோழர் சுந்தரம் (1995)

(...7-ஆம் பக்க தொடர்ச்சி)

ஆன்மா சாந்தியடைவதற்காக மற்றும் அவர்களின் தியாகத்தை போற்றுவதற்காக அல்லது மேலை நாடுகளின் முதலாளித்துவ வாதிகள் கிறிஸ்துவ மத சடங்கின முறைப்படி மெழுகுவர்த்தி கொளுத்தி தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துவதையே வழக்கமாக கொண்டுள்ளனர்.

பாட்டாளி வர்க்க இயக்கத்தவர்களோ அல்லது கம்யூனிஸ்டுகளோ மத நம்பிக்கை கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் என்பதால், மத வாதத்திற்கு எதிரானவர்கள் என்பதால், புரட்சி தியாகிகளுக்கு மதவாத அடிப்படையில் அவர்கள் ஆன்மா சாந்தியடைய வேண்டுமென்று அஞ்சலி செலுத்தாமல், புரட்சி தியாகிகளின் வீரத்தை தியாகத்தை போற்றும் விதமாக "செவ்வணக்கம்" செலுத்துவதை வழக்கமாக கொண்டுள்ளனர்.

பொதுவாக கம்யூனிஸ்ட்டுகள், ஒரு கம்யூனிஸ்ட் இன்னொரு கம்யூனிஸ்டை சந்திக்கிறபோது தோழர் என்றே அழைத்துக்கொள்வர். வேறு எந்த உறவுமுறை வார்த்தையையும், அப்பா, ஐயா, அண்ணா, அக்கா, தங்கை, சகோதரன், சகோதரி, உடன் பிறப்பு, இரத்தத்தின் இரத்தம், சொந்தங்களே... என்றெல்லாம் உறவு முறையை சொல்லி அழைத்துக்கொள்ள மாட்டார்கள். தோழர் என்றே அழைத்துக்கொள்வர். அதேபோல் சந்தித்துக்கொள்ளும் போது கூழை கும்பிடோ, சல்யூட்டோ வைத்துக்கொள்ள மாட்டார்கள் மாறாக புரட்சி வணக்கம் செய்துகொள்வார்கள். அதாவது ஐந்து கண்டத்து பாட்டாளிகளும் ஒன்று, உலகத் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று-எனும் பொருள் பட ஐந்து விரல்களையும் ஒன்றாய் சேர்த்து புரட்சி வணக்கத்தை செலுத்துவார்கள். தோழர்கள் சந்தித்து கொள்ளும் போது புரட்சி வணக்கமும், புரட்சி தியாகிகளுக்கு (ரெட்சல்யூட்) செவ்வணக்கமும் செலுத்துவர்.

திராவிட இயக்கம் தமிழ் நாட்டில் தொடங்கியதும் அவ்வியக்கம் கடவுள் மறுப்பு கொள்கைகளை கொண்டிருந்ததால் அவ்வியக்கம் முதலாளித்துவ இயக்கமாக இருந்தாலும், காந்திய வாதிகளைப் போல் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தும் முறைக்கு மாறாக வீரவணக்கம் செலுத்தும் முறையை மேற்கொண்டனர். முக்கியமாக மொழி போர் தியாகிகளுக்கு வீர வணக்கம் செலுத்தும் முறையை மேற்கொண்டனர். அவர்களைத் தொடர்ந்து பல முதலாளிய இயக்கங்களும் குட்டி முதலாளியவர்க்க இயக்கங்களும் வீர வணக்கம் செலுத்தும் முறையை மேற்கொண்டனர்.

- ◆ அஞ்சலி செலுத்துவது மதவாதமுறை
- ◆ வீரவணக்கம் செலுத்துவது குட்டி முதலாளி முறை
- ◆ சிவப்பு வணக்கம், செலுத்துவது பாட்டாளிய முறை

பாட்டாளிவர்க்க இயக்கம் பாட்டாளி வர்க்க கம்யூனிச புரட்சியாளர்கள் தியாகிகளானால் செவ்வணக்கம செலுத்த வேண்டும். அதே நேரத்தில் இங்கு மொழிக்காக, இனத்திற்காக தியாகிகளாகும் குட்டி முதலாளியதேசிய முதலாளி வர்க்கத்தினருக்கு கம்யூனிஸட்டுகள் வீர வணக்கம் செலுத்த வேண்டும்.

இங்கு எத்தனையோ புரட்சி தோழர்கள் தியாகளாகியுள்ளனர். அவர்களில் எவரையும் வேறுபடுத்திப்பார்க்கக்கூடாது. அனைவரையும் சமமாகவே மதிக்க வேண்டும். இன்னும் சொல்லப்போனால், பெயர் தெரியாத தியாகிகளும் இருப்பர் யாருக்கு செவ்வணக்கம் செலுத்துவது யாருக்கு வீரவணக்கம் செலுத்துவது என்று பிரித்தறிந்து செய்ய வேண்டும்.

-தோழர் சுவை. முருகேசன்

ஆசிரியர் தமிழ் தேசிய செங்கொடி

## தோழர்களின் நினைவு குறிப்புகள்



தோழர் சரவணன் த/பெ. மருதையன், நின்னியூர், செந்துரை வட்டம், அரியலூர் மாவட்டம். கிராமத்தைச் சேர்ந்தவர், மார்ச்சிய லெனிய மாசேதுங் சிந்தனையால் ஈர்க்கப்பட்ட தோழர் சரவணன் அவர்கள் ஆண்டிமடம் காவல்நிலைய குற்ற எண். 234/97 தமிழ்த்தேசிய விடுதலையை முன்னெடுத்து செல்வதற்காக ஆயுத பறிப்பில் ஈடுபட்டதாக கைது செய்யப்பட்டு தேசியபாதுகாப்பு சட்டத்திலும் கைது செய்யப்பட்டார். ஒரு ஆண்டு சிறையில் இருந்தார். திருச்சி அமர்வு நீதிமன்றத்தில் பிணையில் எடுக்கப்பட்டார், தோழர் சரவணன் சாதிமறுப்பு திருமணம் செய்து கொண்டார். இவரது மனைவி பெயர் பூங்கொடி, மகன் பெயர் திலீபன், மகள் பெயர் திரவியம் இவர் கடந்த 1-6-2018 அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார். தோழருடைய இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்கள் ஆலப்பாக்கம் முருகேசன், ரேடியோ வெங்கடேசன், மாறன், பொன்பரப்பி தியாகராஜன், பாஸ்கர், கலை, கோபாலன்குடிகாடு சங்கர், கணபதி, மேகராஜன், செதலாவடி செல்லதுரை, பொன்பரப்பி அறிவழகன் மற்றும் தோழர்கள், மற்றும் வழக்கறிஞர் ராஜவடிவேலு இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டு செவ்வணக்கம் செலுத்தப்பட்டது.

-தோழர் பெ. சங்கர்

★ ★ ★

தோழர் சின்னத்தம்பி. சென்னிநத்தம்-கிளாங்காடு, சேத்தியாத்தோப்பு,சிதம்பரம் வட்டம், கடலூர் மாவட்டம், மார்க்சிய லெனிய மாசேதுங் சிந்தனையால் ஈர்க்கப்பட்டும், பெண்ணாடம் தோழர் தெய்வலெனின் அவர்களால் அரசியல் படுத்தப்பட்டு தமிழ்தேசிய அரசியல் விடுதலையை முன்னெடுக்கப்பட்டு போராடினார். குள்ளஞ்சாவடி காவல் நிலைய குற்ற எண். 346/93 வழக்கில் சம்பந்தப்பட்டு தமிழ்தேசிய அரசியல் விடுதலையை முன்னெடுத்து போராடினார், நெய்வேலி சேப்ளாநத்தத்தில் தோழர் உத்திராபதியுடன் வெடிகுண்டு எடுத்து சென்றதாகவும் எதிர்பாராமல் வெடிகுண்டு வெடித்ததாகவும் 10-07-1994 அன்று இறந்து போனார். அவரது நினைவு நாளான 10-07-18 அன்று தோழர்கள் சுவை முருகேசன், தோழர் கலை, தோழர் பூ.சிவக்குமார், பெ.சங்கர், சி.பாஸ்கர், சி. தியாகராசன், மற்றும் மேகராஜன், கூடி தோழருக்காகவும் மற்றும் வேலூர் சிப்பாய் புரட்சிக்கும் செவ்வணக்கம் செலுத்தினர்.

-தோழர் சி.தியாகராஜன்

★ ★ ★

தோழர் உத்திராபதி அரியலூர் மாவட்டம், ஆண்டிமடம் வட்டம், சிலுவைச்சேரி கிராமத்தைச்



சேரந்தவர், அவரது தந்தை பெயர் ரெங்கநாதன் தாய் பெயர் சரஸ்வதி மனைவி பெயர் ஜெயக்கொடி மகன் பெயர் தமிழ்மாறன். அவர் தோழர் பெண்ணாடம் தெய்வலெனின் அவர்களால் அரசியலுக்கு வந்தவர், மார்ச்சிய லெனிய மாசேதுங் சிந்தனை மற்றும் தமிழ் தேசிய சிந்தனையால் ஈர்க்கப்பட்டவர், தமிழ்தேசிய ஆயுத போராட்டத்தில் குள்ளஞ்சாவடி காவல் நிலைய குற்ற எண்.346/93-இல் சம்மந்தப்பட்டதாகவும், பூம்புகார் இறால் பண்ணை குண்டு வைத்ததாகவும், மயிலாடுதுறை டி.வி. டவருக்கு வைத்ததாகவும், தூத்துக்குடி ஸ்டெர்லெட் வெடிகுண்டு மின் டவரில் வெடிகுண்டு வைத்து தகர்த்ததாகவும் ஆண்டிமடம் காவல்நிலைய வழக்கில் 10 ஆண்டுகள் சிறைதண்டனை பெற்றுவர் ஜாமீனில் வெளியில் வந்தவர் உடல் நல குறைவால் கடந்த 24-8-2014-ஆம் நாள் இறந்தார். அவருடைய நினைவேந்தல் நிகழ்ச்சி

செந்தமிழ்க்குமரன் தலைமையில் பொன்னி, மாயவேல், செல்வா, தமிழ்தேசிய பாதுகாப்பு இயக்கம் தோழர் பாஸ்கர் ஆகியோர் நினைவேந்தல் நிகழ்ச்சியில் செவ்வணக்கம் செலுத்தப்பட்டது.

–தோழர் சி.பாஸ்கர்

☆ ☆ ☆



தோழர் குமார் அரியலூர் மாவட்டம் செந்துறை வட்டம் உஞ்ஞனி கிராமம், தந்தை பெயர் சடையன், தோழருக்கு 2-வயது இருக்கும் போது அவரது தாய் மாமாங்க செல்வி இறந்துபோய்விட்டார். அதன் பிறகு தனது பாட்டியின் வளர்ப்பில் வளர்ந்தவர். மார்ச்சிய லெனிய மாசேதுங் சிந்தனை மற்றும் தமிழ்தேசிய சிந்தனையால் ஈர்க்கப்பட்டு அரசியலுக்கு வந்தவர். 1995-ஆம் ஆண்டு அக்டோபர் சோசலிச புரட்சி தினத்தை ஒட்டி வல்லம் முந்திரிகாட்டின் தனி உடைமையை எதிர்த்து துண்டு பிரசுரங்களை வழங்கியதன் வாயிலாக தனது அரசியல் வாழ்க்கையை துவங்கியவர், 1997-ஆம் ஆண்டு ஆண்டிமடம் காவல்நிலைய ஆயுத போராட்டத்திற்கான ஆயுத பறிப்பு வழக்கு காலகட்டத்தில், தலைமறைவாக இருந்ததாக, உடையார்பாளையம் காவல்நிலைய ஆய்வாளர், (வேதாரண்யம் அருகில் தேத்தாக்குடியை சேர்ந்தவர்) சுப்பிரமணியன் தனது படையுடன் சென்று குமாரை தேடிய போது குமார் இல்லாததால் அவரது தந்தை சடயனை அழைத்து வந்து ஜெயங்கொண்டம் காவல் நிலையத்தில் வைத்து அடித்து கொலை செய்யப்பட்டார். அவரது தந்தையான சடையன் உடலை எங்கும் எடுத்து செல்ல இயலாமல் காவல்நிலைய பின்புறத்தில் உள்ள வேப்பம் மரத்தில் தூக்கில் தொங்கவிட்டு நாடகமாடினர், இதற்கு நீதி கேட்டு மார்ச்சிய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜெயங்கொண்டத்தில் மிகப்பெரிய ஆர்ப்பாட்டம் நடந்தது. கொலை செய்த சுப்பிரமணியன் ஆய்வாளரும், கொலையுண்ட சடையனும் ஒரே சாதி என்பதால் போராட்டம் திசை திருப்பப்பட்டு எவ்வித நியாயமும் இல்லாமல் போனது, குமார் கடந்த 5-11-2015 அன்று உடல்நலக்குறைவால் இறந்தார். வரும் நினைவு தினத்தில் தோழருக்கு செவ்வணக்கம் செலுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது.

–தோழர் கலை

☆ ☆ ☆

பெரியவர் முதலாம் ஆண்டு நினைவு...

கடந்த 9-6-2018 அன்று லால்பேட்டையிலிருந்து நத்தமலை கிராமம் வரை ஊர்வலமாக சென்று அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் செவ்வணக்கம் செலுத்தப்பட்டது. ஊர்வலத்தில் கலந்து கொண்ட தோழர்கள். அரங்க. குணசேகரன், (ஒருங்கிணைப்பாளர், தமிழக மக்கள் முன்னணி) குடந்தை அரசன் (தலைவர் விடுதலை தமிழ்ப்புலிகள்) நாகராஜன், தாஸ் (தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்கம்) செந்தமிழ்க்குமரன், வழக்கறிஞர் பரமசிவம் தமிழ்தேச மக்கள் கட்சி, மாறன் ஆலப்பாக்கம் முருகேசன், சோழங்குறிச்சி தங்கவேல், மற்றும் தமிழ்தேசிய பாதுகாப்பு இயக்கத்தினர் மற்றும் ஆசிரியர் சுவை.முருகேசன் (தமிழ் தேசிய செங்கொடி இதழ்) மேற்கண்ட தோழர்கள் முன்னிலையில் தமிழ்தேச மக்கள் கட்சியினர், தோழர் சுந்தரம் எழுதிய இங்கிருந்து தொடங்குவோம், தமிழ்தேசிய மக்கள் கம்யூன். ஆகிய அறிக்கைகள் வெளியிடப்பட்டது.

–தோழர் சி. தியாகு

☆ ☆ ☆



தமிழ்த்தேசிய செங்கொடி இதழ் ஆசிரியர் பெண்ணாடம் தோழர் சுவை. முருகேசன் அவர்களின் துணைவியார் வசந்தா அவர்கள் 29-9-2018 சனிக்கிழமை அன்று காலை 5-30 மணியளவில் இயற்கை எய்தினார் அவருடைய இறுதி ஊர்வலத்தில் தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்க தோழர்கள் மற்றும் பொதுவுடைமை வாதிகளும், பொதுமக்களும் கலந்து கொண்டு வீரவணக்கம் செலுத்தினர்.

–தோழர் பூ.சிவக்குமார்



தோழர் தென்தமிழன் அவர்களுடைய பேத்தி தமிழ்கனல்-முருகானந்தம் இவர்களுக்கு திருமணம் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

அடுத்த இதழில்...

தோழன் தென்தமிழன்

- தட்சிணாமூர்த்தியிலிருந்து தென்தமிழன் சீர்த்திருத்தத்திலிருந்து பொதுவுடைமை ஓர் அரசியல் பார்வை
- 1919 ம் வருடம் சென்னை பி&சி எனும் பின்னி மில்லில் மிகப்பெரிய தொழிலாளர்கள் போராட்டம் தொழிற்சங்க உரிமை வேண்டி நடந்தது பற்றி 2019 வரை நூறாம் ஆண்டு
- இரும்புலிக்குறிச்சி கம்யூனிஸ்ட் என்ற அடையாளத்துடன் (முற்போக்கு இளைஞர் அணி) காம்ரேட் ராதா முதல் காவலர் காசி வரை...
- தோழர்கள் வல்லம் தர்மராஜ் ,குவாகம் இராமசாமி இடைக்குறிச்சி ஆதிமூலம் மற்றும் அய்யூர் நன்னி ராமலிங்கம் பற்றி அரசியல் நினைவுகள்
- சின்னவளையம் கூட்டுறவு பட்டு கைத்தறி கடன் வழங்கும் சங்கம் சின்னவளையம்
- தமிழீழ விடுதலை போராளிகளை தமிழக அரசு கைது செய்ததை கண்டித்து அவர்களை விடுதலை செய்ய சொல்லி ஜெயங்கொண்டத்தில் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது பற்றிய தொகுப்பு.
- முந்திரி கொட்டை அறுவடை போராட்டம் களம் கண்டவர்களுடன் நேர்க்காணல் தொடர்
- சாதிய சமத்துவ பகடி போட்டி குமிழியம்
- ஆதிகுடிகாடு தேர்தல் புறக்கணிப்பு களம் கண்டவர்களுடன் நேர்க்காணல்

உலக தொழிலாளர்களே ஒன்று சேறுங்கள்!

# 09.06.2018 முதலாம் ஆண்டு

தேசிய இனங்களின் விடுதலை வெல்க!

## செவ்வணக்கம்







ஆயுத போராட்டம் முதன்மையா,
அரசியல் போராட்டம் முதன்மையா
எனும் வாதம் மார்க்சிய வாதம் அல்ல,
மயிர் பிளக்கும் வாதமே..

தோழர் சுந்தரம்

தமிழ்த்தேசிய அரசியல் போராளி

தோழர் - **பெரியவர் (எ) சுந்தரம்** அவர்களுக்கு

## செவ்வணக்கம்

ஆசிரியர்:சுவை.முருகேசன்
பெண்ணாடம்
தொடர்பு:சி.பாஸ்கர்,
தமிழ்த்தேசிய பாதுகாப்பு இயக்கம்
பருக்கல் (அஞ்சல்)
உடையார்பாளையம் வட்டம்,
அரியலூர் மாவட்டம்.-621 804.
செல்:8124944714

இவண் தோழர்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுவை.முருகேசன் | ப.கலை | பூ.சிவக்குமார் | பெ.சங்கர் | சி.பாஸ்கர் | சி.தியாகராசன் |
| பெண்ணாடம் | சுத்தமல்லி | வடலூர் | கோபலன்குடிகாடு | ஜெயங்கொண்டம் | பொன்பரப்பி |

விலை - ரூ 20

தனிச்சுற்றுக்கு மட்டும்